அப்போது,—

534. பார்குறித்த மன்னர் படையிரண்டு மூன்றாநாட்
போர்குறித்து வந்து புகுந்தனவே—வீரர்
கணக்கிறந்த மால்யானைக் காவலர்க ளெல்லா
நிணக்குழம்பாய் வீழ்ந்த நிலத்து. (௩)

எ-து.—மூன்றாநாள் இரண்டு படையும் பள்ளியெழுந்து யுத்தபூமி புகுந்தபொழுது, துரியோதனன் சேனையைக் கருடவியூகமாக வகுத்து நின்றான் வீஷ்மன். அப்பொழுது இரண்டுபடையும் வந்து சம்மோகித்தாக் கலைப்பெய்ய, எழுந்தியம்பின சங்கபடஹம்; கிளர்ந்தெழுந்தது சேமிகோஷம்; சரவருஷத்தாற் றிசைமறைந்தது; ஆகாசமதிர்ந்தது; தூளிபடல மிரண்டு சேனைகளையும் மறைத்திட்டது. அவ்விடத்துத் துரோணாசாரியனும் பல பதினாயிரம் க்ஷத்திரியரோடே மார்பிற்றேர்ந்து அருச்சுனனை வளைத்து மூடிக்கொண்டான். அப்பொழுது,—

535. கோனுந்தன் றம்பியருங் கோளரியே நேர்ந்திறன்
முனின்ற கைமேலே தாக்கினான்—வானஞ்ச
நீடு சிலைவளையா வெய்தா னெடும்பகழி
கூடும் படையைக் குறித்து. (௪)

ஒருபால்,—

536. கடும்பகழி யொன்றா கருத்தமைய வாங்கி
யிடிம்பி குலமகனை யெய்தான்—கொடுந்தகையைக்
கோனுகந் தேர்மேற் கொடிகொண்ட கோமானைப்
[1] பூணுகத் துள்ளழுந்தப் புக்கு. (௫)

537. போர்வாளி மற்றவன்மேற் பாயப் புனைநெடுந்தே
ரூர்வானை வேலா லுயிர்வவ்விச்—சீர்மதுரைத்
தென்னற்கை மந்தாரை தானளிதற் காரணமாய்
மன்னர்க்கை வென்றான் மகன். (௬)

எ-து.—முன்னொரு சரத்தாற் சகுனி கொப்புள்கி மயங்கி வீழ்ந்தானவன் றேர்ப்பாகனையுங் கொன்று புரவி நான்கினையு முயிர்வவ்வி, அத் துரியோதனனையுங் கைப்பிடியே பிடிக்கக் கருதுகின்ற கடோத்கசனைக்கண்டு,

(பா—ம்.) [1] பூணகத் தோளழுந்தப்.

அதுகண்டு வீஷ்மனும் துரோணாசாரியனும் அசுவத்தாமாவும் உள்ளிட்ட அநேக பராராஷ்டிரத்து க்ஷத்திரியரும் சதுரங்க பதாதியுடன் வந்து அருச்சுனனை வளைத்து மூடிக்கொண்டார். அப்பொழுது யாது செய்தான் அருச்சுனன்:—

543. தொடுத்த கொடுஞ்சிலைநாண் டோள்புரள வாங்கி
யெடுத்த திசையனைத்து மெய்ய—நொடிக்கணத்தில்
வில்விழுந்து தேரிழுந்து வீரக் கொடியிழுந்து
சொல்விழுந்து போனார் சுளித்து. (கஉ)

இவ்வகை சருவ க்ஷத்திரியருந் தேருஞ் சிலையு மழிந்து புறகிட்டனர். அப்பொழுது பலருந் தாளற்றனர், தோளற்றனர், வில்லற்றனர், வாளற்றனர், குடலற்றனர், தலையற்றனர், கொடியற்றனர். குறைத்தலைகள் கூத்தாடின வீரப்பெண்கள் மெல்லியரெழுவருங் கைமிசை யாடும் பந்துபோன்றன; காகமும் நரியுங் கழறியிட்டன; கழுகும் பருந்துங் கலந்தார்த்தன; குருதிவெள்ளம் பெருகியிட்டதாங்கு. அவ்வளவில்,—

544. பூதலத்து மன்னர் பொருதழிந்த போர்க்களத்து
மீதெழுந்த வெங்குருதி வெள்ளத்துச்—சோதி
புகச்சிவந்து காட்டிற்றே பொற்போது சாய
மிகச்சிவந்து காட்டிற்றே மேற்கு. (கங)

545. மட்டவிழ்தார் மன்னர் மடிந்த வமர்க்களத்துப்
பட்டனவும் பார்த்தற்காய்ப் பேராழி—தொட்டருளிச்
செங்கண்மாச் செய்தனவுந் தேர்வேந்தற் குற்றுரைத்தான்
வெங்கண்மா வல்லான் வெகுண்டு. (கச)

மூன்றநாட்போர் முற்றும்.

---

## நாலாநாட் போர்.

கடவுள் வாழ்த்து.

546. எந்தையாய்த் தாயா யிறைவனா யெவ்வுயிர்க்கு
முந்தி மடிவுதவு மூலமா—யந்தமிலாப்
பூதமாய் வேதமாய் நின்ற புராதனனை
யோதவா நெஞ்சே யுணர்ந்து. (க)

547. வெங்கண் மதயானை வெவ்வேல் விறல்வீரர்
திங்க ளனையகுடைத் தேர்வேந்தர்—வெங்களத்தி
லூன்றினார் சேனை யிரண்டுந் தலைப்பெய்த்
தோன்றினான் வெய்யோன் றொடர்ந்து. (உ)

548. தானைத் தலைமை தலைப்பெய்யத் தானவர்கள்
யானைக் குழாத்திடைய றுயினான்—நேர்மொய்த்த
வீரத்தன் டேந்துவிக்க வேந்தற் கிளங்கோமான்
மூரித்தண் டேந்தி முனிந்து. (௩)

இவ்வகை யுத்தவீரர் போர்கொள்ளப்பட்ட யானைகள்மேற் சென்று தாக்கித் தேவேந்திரன் வச்சிராயுதங்கொண்டு பருவதங்களைச் சிறகறுத் தாற்போலத் தானுந் தன் வயிரத்தண்டினால் மோதி முருக்குகின்ற வீம சேனனைக் கண்டு துரியோதனனும் அவன் பிராதாக்களும் வந்து தலைப் பெய்து சுற்றுமுற்றுஞ் சூழ்ந்துகொண்டார். அப்பொழுது யாது செய் தான் வீமசேனன்:—

549. போர்வல் லவன்வீமன் போராம் பொழுதின்கட்
டேர்வல்லான் மேற்கொண்டு சென்றணுகப்—போர்வல்லா
னேறினா னேற வெதிர்ந்தா ரினவேந்தர்
பாறினா ரெங்கும் பறந்து. (௪)

எ-து.—காளாளாய்க் களிற்றிட்டங்களை முதிர்த்து மோதுகின்ற வீம சேனனுக்குக் கடோற்கசன் தேர்கொடுவந்து கொடுப்பத் தேரின்மேற் றேறிக் கதையினைச்சிலைவாங்கிச் சரவருஷஞ்சிந்திச் சங்கூதித் தெறித்தூரப்பி வாச வாயம்பு ஆறுகொண் டுக்கிர வேகத்தோடு துரியோதனன் வக்ஷஸ்தலத் துப் பட்டுருவ வெய் தார்த்தான் வீமசேனன் என்றவாறு. அதுகண்டு அதிவேகமெய்தி வீமசேனனை யாதுசெய்தான் துரியோதனன்:—

550. மீளி வயமாமே லைநான்கும் வெந்தறுக
ளொளி நெடுங்கொடிமே லையிரண்டும்—வாளி
யொருமுப்ப தெய்தா னொளிக்கவசத் தின்மே
லிருமுப்ப தெய்தா னெடுத்து. (௫)

அப்போது யாதுசெய்தான் வீமசேனன்:—

551. கொடுஞ்சிலையை நான்கினு லைந்துகூ றாக்கி
நெடுங்கொடியை யைந்தினு னீக்கிக்—கடும்பரியை

மூன்றினு லெய்தவன்றன் மொய்கவசத் திற்புகுத்தி
யூன்றினு னொண்பகழி யொன்று. (௬)

அப்பொழுது துரியோதனன் பட்டது:—

552. வைய முழுதாளும் வாள்வேந்தர் கோன்மார்பிற்
செய்ய குருதி சிவந்தலைப்பச்—செய்யமலை
வார்த்தட்டு நாடும் வளநாடன் றன்மயங்கித்
தேர்த்தட்டில் வீழ்ந்தான் றிகைத்து. (௭)

இவ்வகை துரியோதனன் வக்ஷஸ்தலம் பிளப்புண்டு மதிமயங்கித் தேர்த்தட்டில் வீழ்ந்தமை கண்டு சர்வக்ஷத்திரியரு மிரிந்தோட, மற்றந்தப் பார்வேந்தன் பிராதாக்கள் தொண்ணூற்றென்பதின்மரும் கண் டதிகோபமெய்தி விரைந்து சென்று வீமசேனனை வளைத்து மூடித் தினைத் தார்த்துச் சரவருஷஞ் சிந்தாநின்றார். அப்பொழுது யாதுசெய்தான் வீமசேனன்:—

553. மத்திரத்தார் வேந்தனையும் வாள்வேந்தன் மாமனையுஞ்
சித்திரத்தே ரோடுஞ் சிலையழித்து—மெய்த்திறத்த
நூற்றுவரு ளைவரையு நுண்கணையா லுட்செய்து
கூற்றுவனுக் காக்கினான் கொன்று. (௮)

554. ஒருபா லிடும்பிசே யோட்ட வொருபாற்
றிருமா றிருமருகன் செல்ல—வொருபா
லிடைமிடைந்த சோமகரும் வீமனுநன் றூட
வுடைந்தழிந்தார் மன்னரெல்லா முற்று. (௯)

அப்பொழுது யாதுசெய்தான் பகதத்தன்:—

555. அட்டிலங்கு வேல்வேந்த ரந்தரத்தி னின்றரசர்
கட்டிலங்கு பல்படையைக் கைகவியா—விட்டெழுந்த
மாக்களிறுந் தானு மருவரைபோல் வந்தரசர்
கோக்களின்மேற் சென்றான் கொதித்து. (௧௦)

இப்படி பகதத்தன் செய்ததுமன்றிச் சுப்பிரதீகமென்னுமவன் யானையானது பாண்டவர் சேனையிலிருக்கும் யானை முதலியவற்றைத் துவைத்து மடித்து நாசஞ்செய்வதைக் கண்டு யாதுசெய்தான் கடோற்கசன்:—

556. பல்களிற்றை வெல்களிற்றைப் பாவடியின் கீழ்ப்படுத்திக்
கொல்களிற்றைச் சுற்றுமுற்றுங் குத்துவித்தா—னல்ல

விடுமாய மவ்வில் விறலிடும்பி சூதன்
கொடுமாய வேழங் கொணர்ந்து. (கக)

அப்போது,—

557. கடலுடைந்த தாமென்னக் காய்பரித்தேர்த் தானை
யுடலுடைத்தங் கோடவோ ரோட—வடலுடைந்த
வார்கடல்போற் றோன்றியதே வாட்டிகிரிக் கோமானும்
போர்கடற்கே சென்றான் புரிந்து. (கஉ)

இவ்வகை துரியோதனன் தன் தம்பிமார் முதலானவர்களைப் பறிகொடுத்துச் சோகமுற்றுப் பாடிவீடு புகுந்து விசாரமுற் றிருப்பதைக் கண்டு, அந்தப்புரமடந்தையர் வந்து அவன் பாதத்தில் வீழ்ந்து, பிரலாபித்தது யாங்ஙனமோ வெனில்:—

558. காவு மடலனைய காளையர்க ளெல்லீருந்
தேவர் தலைபணிப்பச் சென்றீர்கள்—பாவ
ரொழியப் புகுந்தீர்க ளையாவென் றுள்ள
மழியப் புகுந்தழுதா ராங்கு. (கங)

**நாலாநாட்போர் முற்றும்.**

# ஐந்தாநாட்போர்.

## கடவுள் வாழ்த்து.

559. மூலமென வோலமிடு முத்திப் பரம்பொருளின்
சீலமருஞ் சேவடியைச் சிந்திப்பாய்—ஞாலத்து
நெஞ்சே நிலைகளர்ந்து நீதடுமா றுமல்வந்
தஞ்சே லெனுங்கா ணவன். (க)

அப்பால்,

560. அத்த மலையடைந்த வத்திசையி னில்லாதே
மத்தக் கதிர்கண் மலர்பரப்பித்—தத்தஞ்
சலந்திரிவ வந்துறங்குந் தாழ்வரையி னுச்சி
வலந்திரிவான் றோன்றினான் வந்து. (உ)

சூரியோதய மானபின்பு இரண்டுபடையுஞ் சேர, யாது செய்ததோ வெனில்:—

561. மால்களிறும் பாய்மாவு மன்னவர மேற்கொண்டு
கோல்கெழுவும் வெஞ்சிலையுங் கூர்வாளும்—வேன்முழுதுந்
தங்களங்கைக் கொண்டார்க டார்வேந்த ரெல்லாரும்
வெங்களங்கைக் கொண்டார் வெடிந்து. (௩)

இவ்வகை படையிரண்டும் ஆர்த்துவந்து யுத்தகளம்புகுதக் கசேனு என்னும் யூகம் வகுத்து நின்றான் ஸ்ரீவீஷ்மன்; அப்பொழுது பாண்டவர் சேனையை வச்சிராபம் என்னும் யூகம் வகுத்துநின்றான் திஷ்டத்துய்மன்; அவ்வளவில் அருச்சுனனைக்கொண்டு விரைமணித்தேரை முடுகவிட்டு ஸ்ரீவீஷ்மன்பாற் சென்று சரவருஷஞ் சொரிந்து மூடிக்கொண்டு யுத்தம் விளைவித்தான் ஸ்ரீவாசுதேவனுகைக் கருதுவது. அப்பொழுது யவனரையுங் காலிங்கர் கூட்டத்தினையும் இக்ஷுபானுகுலத் தரசர்களையும் சல்லிய சகுனி களையும் சௌராஷ்டிரரையும் சயத்திரதனையும் மற்றுமுள்ளிட்ட சருவ க்ஷத்திரியரையுங் கச துரங்க பதாதிகளோடுந் துரியோதனன் விடுத்து ஸ்ரீ வீஷ்மனைக் காத்துநிற்பீராமினென மற்றவரும் போய் ஸ்ரீவீஷ்மனைக்காத்துத் துணைசெய்யுமிடத்து யாதுசெய்தான் வீமசேனன்:—

562. வெங்கலிங்கர் கூட்டமும் வேல்வேந்தர் தம்படையுஞ்
செங்கலங்க லாய்மிதப்பச் சீறினன்—கங்கை
வளை [1] வரைத்தண் சாரன் மணிகொணரு நன்னாட்
டிளவரசன் பாண்டவர்க ளேறு. (௪)

எ - து.—பதினாயிரங் காலிங்கரையும் ஐயாயிரம் யவனரையும் மூவா யிரம் இராச குமாரரையும் கொடியிற் படமலைந்து சல்லிய சகுனிகளையுங் கைதுரந்து சயத்திரதனைத் தேருஞ் சிலையு மழித்துச் செல்லாநின்ற வீம சேனனுக்கு நிலையாற்றா துடைந்திட்டது மகாசேனை. அப்பொழுது,—

563. மாமானு மத்திரனு மான்றேர்த் திரிகத்தர்
கோமானுங் கோவேந்தன் றம்பியரும்—[2]போமாறில்
பார்த்தனைத்தாஞ் சூழ்ந்து பரிபவங்கள் [3] பட்டுடைந்து
கோற்றொழிலுந் தாமறந்தார் கூர்ந்து. (௫)

இவ்வகை துரியோதனனால் விடுக்கப்பட்ட மகாசேனை யுடைந்து பின் னும் யாங்ஙனங் கூடிற்றே வெனில்:—

(பா—ம்.) [1] வரைதன். [2] போமமரிற். [3] பட்டுடைந்தார்.

564. [1] தாங்கு புனற்கங்கைத் தார்வேந்த னெம்மரையு
மீங்கு விடுத்தா னிகல்வேந்த—னோங்கு
விடநாகங் கொண்ட விறல்வேந்தன் விட்டான்
படநாகம் போலும் படை. (௬)

எ-து.—துரியோதனனும் [illegible] தாமாவும் இருவர்களும் [illegible] செய்தான் தருமபுத்திரன்:—

565. கொற்ற முரசுயர்த்த கோ [2]வேந்த னெம்மருடன்
மற்று விடுத்தான் வழுதியையு—முற்றுந்
திசையனைத்து மோடத் தெரிசரங்கள் சிந்தி
விசையனைப்போய்க் காமின் விரைந்து. (௭)

எ-து.—நகுல சகாதேவரையும் [illegible] கடோற்கசனையும் அபிமன்னுவையும் [illegible] னையும் பாண்டியராசனையும் அருச்சுனனுக்குத் துணையாக [illegible] தான் தருமபுத்திரனுக் [illegible] படை மன்னருந் தலைப்பெய்து மகாயுத்தம் விளைத்திட்டார்கள். ஒருபால்,—

566. வில்வல்லான் றன்மகனும் வீமன் பெருமகனுஞ்
சொல்வல்ல வம்பு சொரிந்தார்கள்—கொல்வல்ல
நேரே கரியிரண்டு நேரே [3]புடன்றுதமிற்
போரே புரிவனவே போன்று. (அ)

எ-து.—அசுவத்தாமாவுக்குங் கடோற்கசனுக்கும் [illegible] விளைந்திட்டது; அப்பொழுது [illegible] எய்து ஆர்த்தலும், அதனை [illegible] வாயம்பினால் மற்றவன் [illegible] றவாறு. ஒருபால்,—

567. போர்வென்ற வீமன் பொலன்கவசத் துன்கிழிய
விரைந்து வெங்கணைகொண் டெய்தார்த்தான்—கார்கண்ட
காந்தட் கடிமலர்க்கைக் காந்தாரி காட்டியபத்த
வேந்தர்க்கு முன்பிறந்த வேந்து. (௯)

---

(பா—ம்.) 1 தாங்குதிறற் [illegible], யீங்கு. 2 வேந்தர். 3 உடன்றமிற், போரே பொருவனவே.

எ-து.—துரியோதனன் வீமசேனனைக் கவசம் சிதறிய வெய்து ஆர்த்திடுதலும் அதுகண்டு சத்தியசாத்தகி வந்தென்றுகொண்டு துரியோதனன் மேல் இரண்டு வெங்கணையும் துச்சாசனன்மேற் பத்தும் சகுனிமேற் பதினொந்தும் இவ்வகை பகழிபாய்ச்சித் தேருஞ் சிலையு மழித்து லக்ஷணகுமாரன் வந்தானை ஆறம்பினாற் தேரழித்து ஐந்தம்பினால் வில்லறுத்து யவனரையுங் காலிங்கரையுந் தனித்தடுக்கி மலர் வெள்பூளையைக் கிளவனி துரந்தாற்போலப் பெரும்படையைக் கலக்குறுத்திக் கொல்லாநின்றானைக் கண்டு மற்றவனுடன் வெகுண்டெழுந்து பூரிசிரவா வந்தென்றுகொண்டு தலைப்பெய்தான். அப்பொழுது,—

568. ஒருகுலத்துக் காளையரோ டொள்ளமர ரேத்தக்
குருகுலத்துக் கோளரிமாத் தன்னோ—டொருகுலத்துத்
தோன்றாளாய் நிற்கின்ற தோன்றற் கிளங்கோமா
னேன்றா னெரிசரங்க ளெய்து. (கo)

இவ்வகை யிருவரும் பொருகின்ற பொழுது சாத்தகி வெஞ்சிலையை யொரு வாள்வா யம்புகொண்டு துணிய வீழ்த்தலும் வெற்றிச் சிலையொன்று கொண்டு பூரிச்சிரவாவைத் தேரழித் திருவரும் பதாதியாய் நின்று யாது செய்தாரோ வெனில்:—

569. ஓடிய ஞாயி றுவாமதியோ டொத்தாற்போற்
கேடகங்க ளோரிரண்டுங் கேழ்கிளர—வாடமரிற்
றாக்கினார் சாரிகைகள் சந்தித்தா ராயுதங்க
ளாக்கினார் தம்மி லுடன்று. (கக)

இவ்வகை யிருவருந் தாக்கினார். அப்பொழு திரண்டு படையும் வந்தின்றி யிருவரையுங் கைக்கொண்டு மகாயுத்தம் விளைந்திட்டது. அப்பொழுது ஒருவரை யொருவர் சாயாது கச துரங்க பதாதிகளும் பார்மன்னரும் பட்டுவீழ்ந்து கிணக்குழம்பிற் றேர்தாழ்ந்து காகபந்தங் கலந்தார்த்தன. தங்களில் க்ஷயமாகாமல் நின்றனராகக் கருதுவது. அவ்வளவில்,—

570. ஒற்றைத் திகிரி யொளிமணித்தே ரூர்வானும்
வெற்றிக் கடற்றானை வேல்வேந்தி—ரிற்றைக்
கமையும்போ ரென்பான்போ லவ்வரையி னுச்சிக்
கிமையவரை புக்கா னிசைந்து. (கஉ)

இவ்வகை ஆதித்தியபகவா னஸ்தமன பருவதஞ் சேரக்கண் டிரண்டு படையுங் கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது.

ஐந்தாநாட்போர் முற்றும்.

---

மூன்றினு லெய்தவன்றன் மொய்கவசத் திற்புகுத்தி
யூன்றினு னெண்பகழி யொன்று. (௬)

அப்பொழுது துரியோதனன் பட்டது:—

552. வைய முழுதாளும் வாள்வேந்தர் கோன்மார்பிற்
செய்ய குருதி சிவந்தலைப்பச்—செய்யமலை
வார்த்தட்டு நாடும் வளநாடன் றன்மயங்கித்
தேர்த்தட்டில் வீழ்ந்தான் றிகைத்து. (எ)

இவ்வகை துரியோதனன் வக்ஷஸ்தலம் பிளப்புண்டு மதிமயங்கித் தேர்த்தட்டில் வீழ்ந்தமை கண்டு சர்வக்ஷத்திரியரு மிரிந்தோட, மற்றந்தப் பார்வேந்தன் பிராதாக்கள் தொண்ணூற்றென்பதின்மருங் கண்டதிகோபமெய்தி விரைந்து சென்று வீமசேனனை வளைத்து முடித் தினைத் தார்த்துச் சரவருஷஞ் சிந்தாநின்றனர். அப்பொழுது யாதுசெய்தான் வீமசேனன்:—

553. மத்திரத்தார் வேந்தனையும் வாள்வேந்தன் மாமனையுஞ்
சித்திரத்தே ரோடுஞ் சிலையழித்து—மெய்த்திறத்த
நூற்றுவரு ளொவரையு நுண்கணையா லூட்செய்து
கூற்றுவனுக் காக்கினான் கொன்று. (அ)

554. ஒருபா லிடும்பிசே யோட்ட வொருபாற்
றிருமா றிருமருகன் செல்ல—வொருபா
லிடைமிடைந்த சோமகரும் வீமனுநன் றாட
வுடைந்தழிந்தார் மன்னரெல்லா முற்று. (௯)

அப்பொழுது யாதுசெய்தான் பகதத்தன்:—

555. அட்டிலங்கு வேல்வேந்த ரந்தரத்தி னின்றரசர்
கட்டிலங்கு பல்படையைக் கைகவியா—விட்டெழுந்த
மாக்களிறுந் தானு மருவரைபோல் வந்தரசர்
கோக்களின்மேற் சென்றான் கொதித்து. (௧0)

இப்படி பகதத்தன் செய்ததுமன்றிச் சுப்பிரதீகமென்னுமவன் யானையானது பாண்டவர் சேனையிலிருக்கும் யானை முதலியவற்றைத் துவைத்து மடித்து நாசஞ்செய்வதைக் கண்டு யாதுசெய்தான் கடோற்கசன்:—

556. பல்களிற்றை வெல்களிற்றைப் பாவடியின் கீழ்ப்படுத்திக்
கொல்களிற்றைச் சுற்றுமுற்றுங் குத்துவித்தா—னல்ல

வீமசேனனுடனே யொருபாற் சல்லியனும் வந்து தாக்க, அவனையுந் தேருடனே யெடுத்தெறியுமளவில் துரோணாசாரியன் பின்னு மொருபான் மேற் சென்று வீமசேனனைச் சூழ்ந்துகொள்ள, இருக்காலாவதும் ஆசாரியனைத் தோற்றுத்துப் பதாதியாக்கித் துரத்தத் துரப்புண்டுபோக, மற்றவருடன் வந்த தேராட்களையுஞ் சதுரங்க பதாதிகளையுங் கொன்றுழக்கிப் பார்மன்னரைப் பொடியாக்கி மகாசேனையை நாசஞ்செய்து விலக்குவாரைப் பெறாது யுத்தகளமுழுதும் வேட்டந்திரிபு மதகரியாய் நின்றான் வாயுமூர்த்தி வீமசேனன் என்றவாறு. இவ்வகை திரிகின்றானைக் கண்டு துரியோதனனுந் தம்பிமாரும் வந்து வளைந்து மூடித் திளைத் தார்த்தார். அப்பொழுது பின்னும் யாதுசெய்தான் வீமசேனன்:—

575. புண்ணூறு செங்குருதி பொற்கவசத் துள்ளிழியத்
தொண்ணூறு வீரச் சுடுசரத்தாற்—றெண்ணீர்க்
கன்வரைமே னின்றிழியுங் கங்கைசூழ் நாட
ரனைவரையு மெய்தா னழித்து. (ரு)

இவ்வகை தொண்ணூறு சுடுகணையாற் துரியோதனன் றம்பிமாரையும் பலமழித்து, மற்றுங்குரின்ற சர்வ க்ஷத்திரியர்மேற் சென்று அவர்களாற் பரிபவப்பட்டு வளைப்புண்ட வீமசேனனுக்குத் துணையாவாரைத் தெரிந்து யாதுசெய்தான் தருமபுத்திரன்:—

576. வீமன்றே ராழிதமைக் காக்க விறலாழி
மாயன் மருகனொடு மற்றங்கோர்—வேமுனையிற்
போராட் களையழிக்கும் போர்வல்லார் பன்னிருவர்
தேராட் களைவிடுத்தான் சென்று. (சா)

இவ்வகை தருமபுத்திரனால் விடுக்கப்பட்ட அபிமன்னுவினோடு விகன்னன் வந்து தாக்கித் தேருஞ் சிலையும் அழிப்புண்டு முப்பத்தெட்டடி விரைந் தோடிச் சித்திரசேனன் றேர்புகப் பாய்ந்தானைக் கருதுவது. ஒருபால்,—

577. கல்லணி திண்டோளார் காவலர்கண் முன்னபிமன்
வில்லைப் பொடிகண்டான் வேல்விகன்னன்—வில்லொன்று
மாண்டதேர்ப் [1]பார்த்தி வனைத்தெய்தான் மற்றிவன்மேற்
பாண்டவர் [2]கோ மைந்தன் பகைத்து. (எ)

(பா—ம்.) [1] பார்த்தன். [2] கோன்மைந்தன்.

இவ்வகை விகர்ணன் சிலையறுத்து வீழ்த்திப் பின்னும் யாது செய்தான் அபிமன்னு:—

578. வெற்றிச் சிலையொன்றும் வீரத் தனிக்கொடியு
மற்றுப் படவம்பி னுங்கழன்று—முற்றுந்
திசையதிரச் செல்லுஞ் சினவயிரத் தண்டை
விசையன்சேய் விட்டான் வெகுண்டு. (அ)

இவ்வகை அபிமன் விட்ட தண்டாயுதத்தை விலக்கி மகனிகோதகேயென ஆர்த்துச் சரவருஷமெனப் பொழிந்தான் விகர்ணன். அப்பொழுது அது கண்டாற்றாது யாதுசெய்தா னபிமன்னு:—

579. சாரதியுந் தேருந் தடஞ்சிலையும் வெண்குடையும்
போர்பரியும் வீழப் புரட்டினன்—மாபெரிது
முட்கினு னுட்கி யுடைந்த பெருங்களத்து
வெட்கினன் போந்தான் விரைந்து. (கூ)

இவ்வகை யபிமன்னுவினு லிருகோலாவது தன்றேருஞ் சிலையும் அழிப்புண்ண, இலச்சையெய்திப் போயினன் விகர்ணனுக் கருதவது. ஒருபால் வீமசேனனுந் துரியோதனனுந் தலைப்பெய்து யாது செய்தாரோ வெனில்:—

580. ஒன்றினுல் வெஞ்சிலையை வீழ்த்தங் குறுபகழி
யொன்றினன் மல்லகலத் துள்ளழுத்தி—யொன்று
விடுகணையாற் றேரழித்து வெல்கொடியை நான்கு
சுடுகணையா லெய்தான் செருகுத்து. (க0)

இவ்வகை வில்லுந் தேருங் கொடியு மழித்து மல்லகலத்துப் புண்படத் துரியோதனன் தளர்ந்து போதலும், அதுகண்டு பகதத்தனும் சயத்திரதனு முள்ளிட்டா ரநேக ராஷ்டிரத்து க்ஷத்திரியரும் வந்து வீமசேனனைச் சூழ்ந்துகொண்டு சுடுகணைமாரி சொரிந்திடுதலும், அதுகண்டு யாதுசெய்தான் அபிமன்னு:—

581. அந்தார வார்பகழி யைந்தா லமர்கருதி
வந்தார் சிரங்கொண் மணிமுடிமேல்—வெந்தார்
வருந்தவே வில்வளைத்து மாமேகம் போலத்
திரிந்தானவ் வாள்விசயன் சேய். (கக)

**எ-து.**—வீமசேனனின் சூழ்ந்துகொண்ட சர்வ க்ஷத்திரியரையுங் கஜ துரங்க பதாதிகளையும் படமோதிப் பொருகின்ற அபிமன்னுவினுடன் பின்னும் மூன்றுவது விகன்னன் வந்து தாக்கினுன் நாராசமொன்று கொண்டு அவன் மார்பகத்துள் எழுத்தி வித்தியுத்வந்நாகக் கோஷஞ்செய்தானவ் வபிமன்னுவாகக் கருதுவது. அப்பொழுது வாயாலு குருதிசோரத் தேர்த் தட்டின்மேல் விழுந்திட்டான் விகன்ன னென்றவாறு. அவ்வளவில்,—

582. மேற்குலவுந் தெய்வத்தேர் வெய்யோனு மென்மாலை
மாற்கடல்வாய் வீழ [1]மறிந்ததே—தாக்கியதோர்
போர்வேந்தர் பொன்றப் பொருகளந்தான் [2]விட்டகன்ற
பார்வேந்தர் தங்கள் படை. (கஉ)

**எ-து.**— ஆதித்திய பகவான் அத்தமன பருவதஞ் சென்று சேரக் கண் டிரண்டுபடையுங் கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது.

**ஆறுநாட்போர் முற்றும்.**

---

## ஏழாநாட்போர்.

*கடவுள்வாழ்த்து.*

583. மீனமா யாமையாய் வெண்கோட்டு மண்கொண்ட
வேனமாய் நல்ல வெழிலரியாய்த்—தானமா
மண்வேண்டி வாமனனு மாலை மறவாம
லெண்வேண்டு நெஞ்சே யிருந்து. (க)

584. பண்ணமர்ந்த தேரும் பகடும் பரிமாவும்
புண்ணமர்ந்த செங்களமே போதுகைக்கு—விண்ணமர்ந்த
மைசே ரிருளகல மாணிக்கக் கீழ்வரைக்கே
வெய்யோ னுதித்தான் [3]வெடிந்து. (உ)

இவ்வகை அன்றுகழித்த மற்றைநாள் ஆதித்திய பகவா னுதயஞ்செய்யக்கண் டிரண்டு படையும் பள்ளியெழுந்து மகாகோஷத்துடனே சதுரங்கங்கள் மேற்கொண்டு விரைந்துடன் சென்று யுத்தகளம் புகுந்து படைநிலை குறித்தார். அப்பொழுது, பாண்டவர் சேனையை வச்சிரசாபமென்னும்

(**பா—ம்.**) 1 மறிந்தனனே. 2 விட்டகன்றார். 3 விடிந்து.

தரைப்பட்டனர்; குருதிவெள்ளம் பெருகியிட்டது. காலனும் உயிர்திரட்டியிட்டன னப்பொழுது. அவ்வளவில்,—

589. பொங்கு புனற்குருதி போர்க்களத்தின் மீதோட
வெங்கும் பெருஞ்சேனை யிற்றதே—பொங்குகடற்
காலைக்கே வந்த கதிரவனும் போய்ச்சிவந்து
மாலைக்கே புக்கான் மதர்த்து. (எ)

இவ்வகை ஆதித்திய பகவான் அஸ்தமன பருவதஞ் சென்று சேரக் கண்டிரண்டுபடையுங் கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது.

**ஏழாநாட்போர் முற்றும்.**

---

## எட்டாநாட் போர்.

கடவுள் வாழ்த்து.

590. படர்ந்தனவும் பார்புதைப்பப் பஞ்சவர்க்காத் தூது
நடந்தனவு நச்சரவி னுச்சிக்—கிடந்தனவு
[1]மான்றொடர்ந்த தாமரைதா மல்லவோ கானத்தின்
மான்றொடர்ந்த செந்தா மரை. (க)

591. மாலை மதியடைய வைய மிருண்மூடக்
கால மறிந்தகனற் காய்கதிரோன்—மேலைச்
சிலம்பிலே புக்கோன் றிரைகடலின் கீழைச்
சிலம்பிலே வந்தான் சிவந்து. (உ)

**எ-து.**—அன்று கழித்த மற்றைநா ளாதித்தியபகவா னுதயஞ்செய்யக் கண்டிரண்டு படையும் பள்ளியெழுந்து சமரபூமி புகுந்து யாது செய்தனவோவெனில்:—

592. வெம்பு மதயானை வீமற் கெதிராகித்
தம்பியருந் தானுமே தாக்கினா—னும்பர்
சிலையரவஞ் சென்றிசைப்பச் செல்படைமுன் செங்கட்
கொலையரவ முன்னுயர்த்த கோ. (ங)

---

**(பா—ம்.)** 1 கான்றொடர்ந்த தாமரைதா னல்லவோ.

**எ-து.**—தருமபுத்திரன் கபிலிகைபா னெடுக்தேர் கடாவி யதிவேகத் துடன் வருகின்ற வெகுட்சிகண்டு வீமசேனனை வளைத்து சூடிக்கொண்ட சர்வ க்ஷத்திரியரும் பயமேய்தி யாதித்தியகிரணங்கண் டாற்றுதலைட்திட்ட பனி போல விட்டுநீங்கிப் புறகிட்டாராகக் கருதுவது. அப்பொழுது இரண்டா வது மூன்றுவதுமுறை தாக்கின படையெல்லாங் கால்தளர்ந்து தேருஞ்சிலையு மழியக் கடிகைதோறுங் கனன்றெழுந்த கனலேபோல வீமசேனன் மேற் சென்ற சர்வசேனையையுங் களத்தவிக்க, பலகாலுந் துரப்புண்டு அவை நிலை யாற்றுதுடைந்து துரியோதனன் தேர்க்காலில் வீழ, மற் றவனுலுந் தாங்கற் கரிதாய வீமசேனன்கோபாக்கினியால் வெந்து நிலையாற்றது மகாசேனை யுடன் புறகிட்டு ஸ்ரீவீஷ்மனிடைக்கே சென்று மற்றவன் பாதத்திலே வீழ்ந் தியாதுசொல்லிப் பிரலாபித்தான் துரியோதனன்:—

596. எம்பெருமான் கண்ணுளதா நிற்கவே யெம்பிமார்
வெம் [1]பகைஞர் கொல்ல விளிவதோ—வெம்பெருமான்
றேளிணைக்கீழ் வாழ்வோமுந் தோற்பதோ வென்றுரைத்தான்
றுளிணைக்கீழ் நீர்மல்கத் தாழ்ந்து. (எ)

**எ-து.**—எம்பெருமானினக்குக் கண்ணுகநிற்கவே யென்பிராதாக்கள் திவ சந்தோறும் வீமசேன னென்கின்ற வடவாமுகாக்கினியிலே புக் கவியாநின் றார்; இது நீ கண்டுநிற்கத்தக்கதோ வென்று கழறித் துக்கசோகமெய்திப் பேசுகின்ற துரியோதனனைநோக்கி யாதுசொன்னான் ஸ்ரீவீஷ்மன்:—

597. நின்றுணைவ னங்கர்கோன் சொல்வினவு நின்மாமன்
றன்றுமலர்த் தாரோன் றுணிந்தனவு—மொன்றுங்
கடைபோகக் கண்டிலையோ காவலனே யின்னங்
கடைபோகக் கண்டே கவல். (அ)

அன்றியும்,

598. தலைவருவ வெல்லாஞ் சவையகத்தே யுங்கட்
குலகறிய வன்றே யுரைத்தேன்—சிலபகலின்
மாள்கின்றே மெல்லோமு மாளாமல் வெங்களத்தின்
மீள்கின்று ராரோ விளம்பு. (கூ)

அன்றியும்,

599. வில்லிகளிற் பாண்டவரை வெல்கிற்பா ராரென்று
சொல்லிய வென்னைச் சுளித்துரைத்தா—யொல்லொலிநீ

(பா—ம்.) [1] பகையார்.

ரங்கத்தார் கோமா னதிரதரின் முன்றோன்ற
லிங்குத்தா னல்லனோ வின்று. (கO)

அன்றியும்,

600. வெற்றி விதுரன்கை வின்முறிக்க வப்பொழுது
மற்றந்த விடம் விசயனையுஞ்—செற்றமரில்
வெல்வாரை யென்றோ யெனவுரைப்ப நின்முன்னே
[1]வைவானே கன்னன் மறுத்து. (கக)

எ-து.—சபாமண்டபத்து வீற்றிருந்த காலத்துப் பாண்டவருரிமை கொடேனென்றவிடத்து, மற்று அது தகாதென்றும், வீரர்களை வெல்லுஞ் சத்தியுடையார் யாவருமில்லையென்றும், அவ்வாற்றலையுஞ் சத்தியுடைய விதுரனை வில்லுமுறித்துப்போகக் கண்டிருந்தாயென்றும் யான் கட்டுரைத்த காலையில், சபாமண்டபத்துத் துச்சாசனனுஞ் சகுனியும் வெகு மத வாக்கியஞ் சொல்லிப் பாண்டவரை உதாசீனம்பண்ணி யிகழக் கேட்டு மனமகிழ்ந்திருந்தாய்; அந்நான்று நின்காதற்றோழன் கன்னன் பேசிய பருஷ வாக்கியங்களும் நீயறிவை; அவ்விடத்துப் பருஷ வாக்கிய முரைத்தமையும் அவன் பராக்கிரமங்களும் இன்று வீரர்கண்முன் காட்டி அவரைத் தடுத்திலனே என்றும், இவ்வகையெல்லாம் வருமென்றெண்ணி முன்னமே உரைத்தேனை நீயன்று முனிந்தனை; இன்றுனக்கு விளைவாய்நின்றது என்றும் இவ்வகை நலத்திற்கு கலந்துரைத்து, வீரர்களாற் கோபாக்கினியாலவியப்படுவோரை நீ யின்றுங் கண்டுகொள்வாய்; நீ அதற்குத் தவிருவாயாகென்று யானும் என் கூற்றமெல்லாங் கொண்டு தகைபாகின்றேனென்றும், ஸ்ரீவாசுதேவன் அருகு நிற்க இனி அவனை யாவராலும் யுத்தத்தில் வெற்றி கொள்வ தரிதேயென்றும் இவ்வகை தர்மோபதேசத்தைச் செப்பக் கோபாக்கினியால் மிக்கெழுந்து வருகின்ற அருச்சுனன்மேலே போயினன் ஸ்ரீபீஷ்மனெனக் கருதுவது. அப்பொழுது முன்னொருநாள் பகதத்தனேறிய அமர்முட்டி அழிந்துபோன கடோத்கசன் பொய்ம்மையாக ஆறுயிரம் யானையும், ஆறுயிரங் கடோத்கசரும் ஆறுயிரம் பேய்க்கணங்களும் ஒருகையிற் சூலமும், ஒருகையிற் கொள்ளியுமாய்ச் சமரபூமி முழுதுந் தோன்றிக் கண்விளக்குப்பட்ட சர்வசேனைகளையு நாசஞ்செய்யாநின்றான். ஒருபால்,—

601. பல்லா யிரம்பணைத்தார் பல்லா யிரவராய்ப்
பல்லா யிரங்களிறும் பாய்மாவுங்—கொல்லு
மினமாயம் வல்ல விராவான் புகுந்து
சினமாயப் போரே சிறந்து. (கஉ)

(பா—ம்.) 1 வைதானே.

**எ-து.**—முன்னுட் களப்பலியாயின இராவான் பெற்றுக்கொண்ட ஸ்ரீ வாசுதேவன் பிரசாதத்தினுல் எட்டாநாளி யுத்தம்பெற்று, ஆங்கவன் பிரசாதத்தினுல் அஞ்ஞான்று யுத்தபூமி புகுந்து பல்லாயிரம் பணத்தலை குலவ மணி வெயிலெறிப்ப மகாசேனை யித்தனையும் வெருப்பட்டெப்படி வெள்ளெயிற்றினர், செங்கண்ணினர், கருமேனியர், கருமனத்தினர், பலகறையன்ன பகுவாயினர், கவை நாவினர், பலவாலினர், பலகிளையினர், பலவெயிலினர், கோற்படையினர், இரத்தினகசித மகுடத்தின ராயிறு பெத்தனையோ ராயிர நாககுமாரராய்த் தோன்றிச் சேனைமுற்றும் விநாசஞ்செய்ய எத்திசையிலுள்ளாருமிரிந்திட்டனர். அதுகண்டு துரியோதனன், அவ்வளவி லிவ்வகைசெய்வானிராவானென முன்னுணர்ந்து, முன்னம் பகனைக்கொன்ற சல்லியத்தினுல் வீமசேனனுக்குப் பகைவனுவா னலம்புசனென்பானெ ராக்கனை யழைத்து வீமசேனனையாதல் அவன் மரபினரையாதல் கொன்று உன்பகைதணித்துக் கொள்வாயாகென்றும், அருச்சுனன் மகன் இராவானைக் கொன்று என் சோகங்களைத் தீர்ப்பாயாகென்றும், யானும் பகைவரான பாண்டவரைக் கொன்று தருவேன் என்றும் இவ்வகை தெருட்டி விடுத்து, மற்று அவனுக்குத் துணையாக நூறுநூறுயிரம் இராக்கதர்களையும் சதுரங்கபதாதிகளுடன் போக்க, அலம்புசனும் பிரியமெய்தி, என்பிரதிக்கினையை முடிக்கப்பெற்றேனென்று மிகவுங் கருவமெய்தி விரைந்துடன்போய்ச் சமரபூமியினின்ற இராவான்மேற்சென்று, தன்னுல் அவனைத் தொலைக்கப்பெறுது தேருஞ் சிலையு மழிந்து புறகிட்டுப்போந்து, தங்கள் படைநிலையிற் சென்றடைந்தான் [அலம்புசன்] என்றவாறு. அப்பொழுது ஸ்ரீவாசுதேவன் அசரீரியா யலம்புசனிடைச்சென்று யாதருளிச்செய்தானெ வெனில்:—

602. விசயன்றன் சீர்மகனை வெல்லமன [1]துண்டா
லசைவற் றரக்கருடைக் கோவை—வசையற்ற
புள்ளரசா யோடிநீ போன்றுவியா யென்றுரைத்தான்
கள்ளரச ஞய்ப்பிறந்தான் கண்டு. (௬௩)

இவ்வகை ஸ்ரீவாசுதேவன் சென் றசரீரியாய் நின்று, இவன் நாககன்னிகையின் மகனுதலால், இவனைக் கொல்லும்பொழுது நீ கருடவுருக்கொண்டு வஞ்சித்துக் கொல்வாயாகென வருளிச்செய்யக் கேட்டு யாதுசெய்தானலம்புசன்:—

(பா—ம்.) [1] உண்டாய், அசைவற் றரக்கருடை கோவை.

மேலும் பொற்பகழி பாய்ச்சி மேன்மேலுந் தாக்கினர். அப்பொழுது யாது செய்தான் வீமசேனன்:—

607. அலைப்பட்ட வேலுழுவை [1]யாடவர்மேல் வீமன்
சிலைப்பட்ட வெஞ்சரங்கள் சிந்தித்—தலைப்பட்
டொருங்குடனே வீழ்ந்தா ரொளியவனுஞ் சென்று
கருங்கடலின் வீழ்ந்தான் கதித்து. (கஅ)

இரண்டாவது போர்மலைந்த பார்வேந்தன் பிராதாக்களி லெழுதேராட் களைக் கவசங்கிழியக் கலக்குறுத்துவதோர் பகழிபாய்ச்சித் தரணிதலத்து வீழ்த்து மற்றவருடன்வந்த க்ஷத்திரியரையும் அவியனுறிச் சிங்கநாதஞ் செய்தான் வீமசேனனகக் கருதுவது. அவ்வளவில்,—

608. நாழிகையிற் காற்கூறு தாழாது நாயிறுபோய்
வீழ விதியுடைய வேல்வேந்தே—வாழியரோ
[2]டேகாதே பையவே யிற்றைக் குளையாகிற்
போகாயோ வென்றான் புரிந்து. (கக)

ஆதித்தியபகவா னஸ்தமனங்கண்டு துரியோதனன் பட்டுப்படாத தம்பி மாருடனும் மகாசேனையோடுங் கைவாங்கித் தன் பாடிவீடுநோக்கிப் போவா னைக்கண்டு வீமசேனன் சொல்லுவான்: நின்னையும் நின் பிராதாக்களையும் ஒருநாழிகையிற் றரைப்படுத்துவனகக் கருதினேன்; என்னைப் பிழைத் தாதித் திய னின்டன்போ யத்தமித்தா னதலா லுனக்கவன் சகாயஞ்செய்தான். ஆதலால் இனி யுன்மேற் றேர்விடுகிலேன்; நீ உன் சேனைபுடைசூழ மெள்ளப் போவாயாகென் றுரைத்து மீண்டும்போய்த் தன்படைநிலை புக்கான் [வீம சேனன்] என்றவாறு. அதுகண்டு தருமபுத்திரன்சேனை ஆர்த்தெழுந்து வீர முரசு முழக்கியிட, வீரஸ்ரீ பொலிந்திலங்க வாகுத்தடித்து ஸ்ரீவாசுதேவ னினிமைபேசப் படைநிலை கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது. இப்பால், துரியோதனன் யாதுசொல்லிப் பிரலாபித்தானேவெனில்:—

609. என்னெஞ்சம் [3]விட்டழுங்க வேதிலரால் வானடைந்தீ
ரின்னஞ் சிலரோடும் யானிருப்ப—மன்னர்
[4]பெருமானுந் தம்பியரே யென்றழுதான் பின்னைக்
குருநாடர் கோமான் குலைந்து. (உ0)

---

(பா—ம்.) 1 ஆடரவின் வீமன். 2 ஏகாயே. 3 விட்டலங்க. 4 பெருமான் றன் றம்பியரே.

**எ-து.**—வீமசேனனென்றுங் காற்றினனும் அருச்சுனனென்னு மக்கினியாலும் என் மகாசேனையென்னும் பெருங்காடு திவசந்தோறும் வெந்து போகாநின்றது. என் பிராதாக்களும் இந்நாள்வரையி லிருபதின்மர் வீமசேனனாற் கொல்லப்பட்டார்கள். இவ்வகை தளர்ந்துநின்றேனுக்கு நீ ஸ்ரீவீஷ்மனிடையுள்ள காரியத்தினை யொக்காகத் தவிர்த்து நின் றடக்கையில் வில்லேந்தித் திண்டேரேறி யுத்தமண்டலம் புகுந்து வேகாநின்ற சேனையை யஞ்சலென்று திவ்வியமான வம்பென்னும் நீர் முகந்து தடிகைமேகம் வருஷித்து அவியாயாகில், நானும் என் மகாசேனையும் நாளைப் பகற்பொழுதிற் படுகின்றோம் எனக்கேட்டு யாதுசொன்னான் கன்னன்:—

614. கமரழிந்த நீர்நாடன் காங்கெயன்வந் திங்க
ணமரொழிந்து புறக்கவ்வு மாகி—லுமதுரிமை
மண்ணகமாய்ச் செய்தந்த [1]வாள்வேந்தர் தம்முரிமை
விண்ணகமாய்ச் செய்வேன் விடிந்து. (உரு)

**எ-து.**—நான் பின்னை யாயுதம்பிடித்து யுத்தபூமியிற் புகுதே னென்று பாராஷ்டிரத்து க்ஷத்திரிய ரனைவருங் காண ஸ்ரீவீஷ்மன் புறக்கவ்வுமாகிற் பாண்டவ ரனைவரையுங் கொன்று சத்துருசய முடித்துத் திரைலோக்கியங் களு முன்னதேயாகத் தப்பின்றியே நாளைத் தருவேன்; இதற்குச் சந்தேகமில்லை என வுக்கிரமான வுற்சாகத்துடன் கன்னன்பேசிய கட்டுரைகேட்டு மிகவும் பிரியமெய்திச் சிறிதுபொழுது சிந்தித்திருந்து பின்னைத் தன் பிராதாக்களிற் றுச்சாசனனை யழைத்து யாதுசொன்னான் துரியோதனன்:—

615. மல்விற் பொருதிண்டோள் வாள்வேந்த னங்கர்கோன்
சொல்விற் படுஞ்சொற்கள் சோராதே—வில்லின்
மருவித்த திண்டோளான் வாழ்வேந்தன் மூதாதைக்
கறிவித்து வாவென்றா னங்கு. (உசு)

**எ-து.**—பிதாமகனாகிய ஸ்ரீவீஷ்மனுக்கு அங்கராசன் கன்னன் பேசிய வூக்கமுங் கட்டுரையு மறிவித்து வருவாயாகென்று சொல்லக்கேட்டுத் துச்சாசனனும்போய் ஸ்ரீவீஷ்மன்கோயிற் புகுந்து மற்றவனைக் கண்டு நமஸ்கரித்து யாதுசொன்னானோ வெனில்:—

616. கொற்றவநின் பாதம் பணிந்தேயான் கூறுகின்றேன்
வெற்றி தருவதொரு விண்ணப்ப—மற்றெமக்கு

---

(பா—ம்.) [1] வாழ்வேந்தர்.

பட்ட விசயங்களும் மற்று முற்றவார்த்தை யனைத்து முரைப்பக் கேட்டு வியாகுலமெய்தி ஆற்றை யிராத்திரியின்கண் துயில்துறந்தா னிராசராசன் துரியோதனனென்பவாறு. இப்பால், ஸ்ரீ வீஷ்மனும் உதயகால மொரு சாமமெனத் தொலையா வூக்கத்துடன் கொலையானை யென்னப் பள்ளி கொள்ளப் புக்கானெனக் கருதுவது.

எட்டாநாட்போர் முற்றும்.

---

## ஒன்பதாநாட் போர்.

618\. அரிநாம மாதரியா [1]வாதர்காண் முன்ன
மொருநாம நீர்வேண்டிற் [2]றோதிர்—வருநாள்கள்
வாக்கினால் வைத்துரைக்க [3]வல்லீரேல் வான்பிறவி
போக்குவான் றாளே புணை. (௧)

இவ்வகை கடவுள்வாழ்த்து.

619\. பைய விருளோடிப் பாய்கதிரோன் பொற்கடலில்
[4]வெய்ய கதிர்தோன்றி விட்டெறிப்ப—வெய்யமுனைப்
போர்வேந்த ரார்த்துப் பொருகளங்கைக் கொண்டார்கள்
பார்வேந்த ரெல்லாம் பரந்து. (௨)

இவ்வகை யன்றுகழித்த மற்றைநா ளாதித்தியபகவா னுதயகாலங் கண்டு களித்தெழுந் திரண்டுபடையும் பள்ளியெழுந்து வந்து சமரபூமியை நோக்கி யாதுசெய்தாரோவெனில்;—

620\. வீரர் களிறேற வேந்தர்கள்பொற் றேரேறப்
போர்கெழுமி வெஞ்சிலைநாண் பூட்டேற—வார்முரச
மார்ப்பேற வேயினொடு ரம்பு மயில்வாளுங்
கூர்ப்பேற வேறினார் கூர்ந்து. (௩)

இவ்வகை யிரண்டுபடையும் படைக்கலங்க ளலங்கரித்துக் கச துரங்க மேல்கொண்டு விரைந்துடன்போய்ச் சமரபூமிபுகுந்து தலைப்பெய்து தம் மொடுதாந் தாக்கினார். அவ்வளவில்,—

621\. வெற்றித்தேர் வீமன்றன் மேலே விறலரக்கர்
கொற்றத் தரசன் கொதித்தெழுந்து—பற்றிச்

---

(பா—ம்.) 1 ஆதுலர்கண் முன்னம். 2 ஓதி. 3 வல்லீரோ வான். 4 செய்ய.

சிலம்பதனைக் கொண்டெறியச் சென்விசும்பி லாற்றி
யலம்புதனைக் கொன்றா னழித்து. (ச)

**எ-து.**—தடவரையி லொருசிகர முதித் தெழுவதுபோ லலம்புதனைக் கண்டு ஒரு திவ்வியாஸ்திரங் கொண்டு ஆகாசத்திலே தூளியாக வெய்து தரை தமித்து வீழ்த்துச் சமரகோடிஞ்செய்தான் வீமசேன னென்றவாறு. அப்பொழுது, அலம்புதன் பட்டமைகண்டு கலங்கி வழிவிழித்துத் துரியோ தனன் வெகுளியெய்தி [முற்றவன்மேல்] சத்தினையோ ராயிர மத்த கசங்களைக் கொண்டு தாமுட்சரங் கொண்டுமுன் வீமசேனனை நெருக்கலுற் றான். அப்பொழுது யாதுசெய்தான் வீமசேனன்:—

622. காலக் களமென்னு மம்பிமேற் கைம்முகந்து
கோலத்தண் டென்னுங் குழலியான்—மேலிட்
டுரைத்தான் களிறெல்லா மாங்குருதி நீரா
விரைத்தானத் தேரோ டெடுத்து. (ரு)

**எ-து.**—துரியோதனன் பெருஞ்சேனையு மவர்களாற் கொணரப் பட்ட களிற்றீட்டத்தினையுங் கண்டு களித்து வாருத்தழுத்துத் தண்டா யுதத்தால் யானைக்குழாங்களைச் சிதறுவித்து, அவனிதல மம்பியாகத் தன்கையிற் கோற்றண்டு குழலியாகக் குருதிநீர்கொண் டுரைத்து யுத்தகள முழுது முருமேறெனத் திரிந்தான் வீமசேன னென்றவாறு.

623. கைபோற் சிலைகுனியக் கங்கைதரு காவலன்முன்
மெய்போற் றருமன் வெளிப்பட்டான்—மைசே
ரருவரைமேற் கொள்கின்ற வாளரிபோற் றேர்க
ளிருவருமேற் கொண்டா ரெதிர்ந்து. (கூ)

இப்பால், தருமபுத்திரனும் ஸ்ரீவிஷ்மனு மொருபாற் றலைப்பெய்து தாக் கினர். அப்பொழுது அருவரையை யிரண்டு சிங்க மெதிர்த்தாற்போலத் தாக்கி யொன்றிரண்டு நாழிகைத்தாற் றருமபுத்திரன் மார்பில் ஸ்ரீவிஷ்ம னெய்யக்கண்டு தருமபுத்திரன் யாதுசெய்தான்:—

624. கொற்றக் கொடிமுரசங் கொண்டான் கொடுஞ்சிலைநா
[1]ணற்றப் படிம்வண்ண மாங்கெய்ய—வெற்றிவேல்
விட்டெறிந்தான் காங்கெயனை வெய்ய செருக்களத்தே
விட்டெறிந்தா னங்கே வெகுண்டு. (எ)

(பா—ம்.) 1 அற்றப்படிவண்ணம்.

**எ-து.**—முன்னம் ஸ்ரீவீஷ்மனால் வில்லறுப்புண்டு விளிர்த்துபோன தரும புத்திரன் ஸ்ரீவீஷ்மன் மார்பி லொரு வேலிட் டெறிந்து குருதிநீர் சோரக் கண்டு வெறுங்கையே நின்றானாகக் கருதுவது. அவ்வளவில்,—

625. **பல்லா யிரம்பரித்தேர்ப் பாஞ்சால ருள்ளிட்டா**
**ரெல்லாருஞ் சென்றங் கெதிர்ந்தார்கள்—வில்லால்**
**வருகதிர்மேற் சென்றூறு மாமேகம் போலக்**
**குருபதிமேற் சென்றார் கொதித்து.** (அ)

இவ்வகை தருமபுத்திரனுக்குத் துணைசெய்வாராகப் பாஞ்சாலர் கூட்டமுந் திட்டத்துய்மனும் க்ஷத்திரதேவனுஞ் சேதிதானனுஞ் சிகண்டியுமாகச் சென்று மகாசேனையைக் கைதுரந்து சரவருஷஞ் சொரிந்தார். அப்பொழுது யாதுசெய்தான் ஸ்ரீவீஷ்மன்:—

626. **பூஞ்சாலி மச்சத்தார் போர்வேந்தன் றம்பியையும்**
**பாஞ்சாலர் பல்லா யிரவரையுந்—[1]தேஞ்சாலி**
**பொன்றொடுக்குஞ் சோலைப் புனனாடர் காணவே**
**[2]கொன்றழுக்கி நின்றான் கொதித்து.** (கூ)

**எ-து.**—பாஞ்சாலரையும் விராடராசன்றம்பி சதானிகனையு முள்ளிட்ட யுத்த வீரரையுங் கொன்றழுக்கி வீமார்ச்சுன ரிருவருங் கண்டுநிற்க வெம்பெரும்படையைக் கொன்று குவித்தான் ஸ்ரீவீஷ்ம னென்றவாறு. அப்பொழுது யாதுசெய்தான் அருச்சுனன்:—

627. **தொடுத்த கணைமாரி தூவினா னெங்கு**
**மடுத்த பிணக்குவையாய் வீழ—மடுத்த**
**கடற்போற் பசுங்குருதி காறூறு யோட**
**வடற்போர் விசய னமர்ந்து.** (க0)

**எ-து.**—ஸ்ரீவீஷ்மனைச் சூழ்ந்துநின்ற சர்வ க்ஷத்திரியரையுஞ் சரபடலங்களாற் சிதறுவித்துக் களிறுந்தேருங் களத்தவியக் கலக்குறுத்தி யோமுகனையும் பூபலாக்ஷனையும் இழிகுருதியி லொழுக்குவித்துத் திசாமுகங்களைச் செவிடுபடுத்தி ஆகாசமு மவனிதலமுந் தோன்றாவகை சரவருஷஞ் சொரிந்தார்க்கின்ற அருச்சுனனை நிலையாற்றாது புறகிட்டது துரியோதனன் சேனை யென்றவாறு. அவ்வளவில்,—

(**பா—ம்.**) 1 பூஞ்சாலி. 2 கொன்றொடுக்கி.

628. ஆனையொடு தேர்மா வரசர் பலரவியச்
சேனை யுடைந்து செலக்கண்டே—யேனைப்
பொருங்கடலில் வந்துதித்த பொற்கதிரோன் மேலைக்
கருங்கடலில் வீழ்ந்தான் கலந்து. (கக)

இவ்வகை யாதித்தியபகவா னஸ்தமன பருவதஞ் சேரக்கண்டு படை யிரண்டுங் கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது.

ஒன்பதா நாட்போர் முற்றும்.

---

## பத்தாநாட்போர்.

கடவுள்வாழ்த்து.

629. முப்பொழுதாய் மூன்றுலகாய் மூவுருவாய் நின்றானைச்
சொற்பழுது சொல்லாமற் சொல்லுதியே—யெப்பொழுது
மாதவன்றா ளேத்தி மறவாம னீமனமே
யோத [1]வந்தென் னுள்ளே யுறும். (க)

630. மாக்களிறும் பாய்மாவு மான்றேருந் தாஞ்சூழப்
போர்க்கெழுந்துவெஞ்சிலைநாண்பூட்டேற்றி—வேற்களுமே
தங்களங்கைக் கொண்டுடன்று தார்வேந்த ரெல்லாரும்
வெங்களங்கைக் கொண்டார் வெடிந்து. (உ)

அன்றுகழித்த மற்றைநா ளாதித்தியபகவா னுதயகாலங்கண் டிரண்டு படையும் பள்ளியெழுந்து யுத்தகளம் புகுந்தன. அப்பொழுது யாதுசெய்தான் ஸ்ரீவீஷ்மன்: மகானுபாவனும், திரிகாலஞானனுஞ் செல்காலம் வருங்கால மறிந்து வாழ்கின்றானுதலா லன்று தனக்குச் சொர்க்கயான திவசமெனக் குறித்துத் தன் கோயிலுள்ளிருந்து ஏகசாரியாய்த் தன்னனுஷ்டானங்களையு முடித்துப்போந்து, ஒருதனி சபாமண்டபத்தினிலிருந்து, எத்தனையோ ராயிரம் பிராமணரை யழைத்துச் சகல சாத்திரங்களாற் சடங்கு செய்து தடக்கை நீர்கொண்டு வடக்குநோக்கிப் பத்மபீடிகையிலிருந்து பொறிந்த பஞ்சேந்திரியங்களை யொருக்கி யாதுசொல்லித் தியானித்தானென்னில்:—

---

[1] (பா—ம்.) வந்தென்னுள்ளே.

631. ஆக்கை [1]குலைந்திட் டனைத்தெலும்புங் கைவிட்டுக்
காக்கை பருந்து கலவாமுன்—நோக்கிக்
கருமாலை மாற்றிக் கருதிமட நெஞ்சே
திருமாலை யேத்தாய் தெளிந்து. (௩)

இவ்வகை தேவதேவன் விக்கிரமமூர்த்தி பத்தவற்சலன் சக்கரபாணி ஸ்ரீநாராயணசுவாமி ஸ்ரீபாதங்களைத் தியானித்துத் தன்னிருதயத்தினை வேண்டிக்கொண் டொருப்பட் டெத்தனையோ ராயிரம் பிராமணர்க்குக் கோதானம் பூதானம் பண்ணி யின்சொலுடன் விப்பிரர் கூட்டங்களைக் கைதொழுது விடைகொண்டு அஸ்திரசஸ்திர சாலை புகுந்து சருவாயுதங்களை யுங் கைதொழுதெடுத்து அலங்கரித்துத் தன் மணிநெடுந் தேரேறித் தலைத்தி ராணமும் வீரப்புட்டிலும் புனைந் தெம்மருங்குங் கவசப்பிரபை கலந்தெறிப்ப வீராபரணங்கள் வெயிலெறிப்பச் சர்வக்ஷத்திரியருஞ் சூழ்ந்து சேவைபண் ணத் தவளச்சத்திர மேனிழற்றத் தடக்கைவே னின்றிலங்க வெழின்மணிக் கவரி காலசைப்ப வெழும் பனைக்கொடி விசும்பணுவ விமையோர் கூட்ட மெதிர்நோக்கக் கசதுரங்கபதாதி நெருக்கலுறச் சங்கு பேரிகை முதலாகிய வணிகலன்கள் பஞ்சமகாசத்த முழங்கத் தாளுந் தோளு மிடந்துடிப்பத் தடந்தேர்மிசை வீரசிங்கம்போல யுத்தவீரருடன் வந்து சமரபூமி புகுந்து தன் மகாசேனையைச் [2] சருப்பதோபத்திரமென்னும் யூகம் வகுத்துத் தூசி முகத்தின்கண் மகாமேருவைப்போலே நின்றான் அதிரதரின் முன்றோன்றல் ஸ்ரீவீஷ்மன் என்றவாறு. அதுகண்டு தருமபுத்திரன் சேனையைப் [3] பதும ராகமென்னும் யூகம் வகுத்துநின்றான் திட்டத்துய்மனைக் கருதுவது. இவ் வகை யிரண்டுபடையுஞ் சமரபூமிபுகுந்து பண்ணும் வகுப்புமாக நின்றவள வில் யாதுநிகழ்ந்ததோவெனில்:—

632. பொன்னுந் துகிலும் புனைமணியும் பொற்பூணு
மின்னும் பிறவெண் ணிவையெல்லா—மன்னு
மறையவர்க்குச் செய்கின்ற மாதானஞ் செய்தா
னறையுலக மாள்வா னமர்ந்து. (௪)

இவ்வகை மகாதானம் பண்ணிக் கச துரங்க பதாதி புடைசூழ நின்ற ஸ்ரீவீஷ்மனைக் கண்டு பிரியமெய்தி யருச்சுனனுக்குக் காட்டி யாதருளிச்செய் தான் ஸ்ரீவாசுதேவன்:—

(பா—ம்.) [1]குலைந்தே யனைத். [2] பதுமராகமென்னும். [3] கிரவுஞ்சமென்னும்.

633. நின்ற குலமதலை நின்னுடைய மூதாதை
வென்றி விசயாகேள் வெங்கணையால்—இன்று
கொலப்படா னாகிலிக் கோமதலை [1]நம்மால்
வெலப்படா னென்றான் விரைந்து. (௫)

நாசிமுகத்தின்கண் உருமேறோ நின்ற ஸ்ரீபீஷ்மனை பின்னுமாலை யத்தி யளவில் திவ்யாஸ்திரங்களாற் சொர்க்கலோகத்துக்குப் போகவிடா யாகில், மகாசேனைக்கும் நமக்கு மியலோ கூற்றுவாங்கண்டா யென்றும், மூதா தையென்று கருணைபெய்தாதே யிவ்விடம் விலைப் போர்பயிர்ந்து போக்குமது வல்லாது யாவராலு மின்றிப்பின்னை வெற்றிகொள்ள வரிதுகண்டா யென்று மிவ்வகை ஸ்ரீவாசுதேவ னருளிச்செய்யக் கேட்டு யாது விளைப்பஞ்செய்தா னருச்சுனன்:—

634. மாக்கொடியுந் தேரும் வளைசிலையுந் தூணியுந்
தீக்கடவு ளீந்தானீ தேர்ப்பாகன்—முக்குவனேல்
விண்ணரச ரோடே வெகுள்வன் றிருமாலே
மண்ணரச ரோவெனக்கு மாறு. (௬)

**எ-து.**— தேவேந்திரன் காண்டாவனத்தை யக்கினிதேவனுக் கிரையூட்டு கின்றநாளி லவனுற் றரப்பட்ட தேருங் கொடியுந் தூணியுங் காண்டீபமென் னும் வில்லு மிவை திரிமூர்த்திகளாலு மழிக்கப்படா; சருவப்பிராணிகளுக் குந் தேவாசுரர்க்குஞ் சுவாமியாயுள்ள வெம்பெருமானே! நின்னைச் சாரதி யாக வுடையேன்; இப்படிக்கொத்த வெனக்கு, யக்ஷ ராக்ஷத கந்தருவ சித்த கருட கின்னர கிம்புருட ரென்கின்ற வெதிராளிகளாதலால், மனு ஷர் ஒருபொருளாக விவ்வகை யெல்லா மருளுமதோவென்று மிகவெகுண்டு தன்கடவுட் சிலையினை ஜ்யாகோஷஞ்செய்து ததம்பனைத் தேரோட்டி ஸ்ரீ வீஷ்மன்மேற் சென்று தாக்கினா னருச்சுனன். அப்பொழுது,—

635. குரக்குக் கொடியின்மேற் கூவியம்பா லெய்து
[2]சரத்துக் குழுவுபல தாக்கி—யரக்கரைமுன்
முக்கோடி வென்றான்மேன் மூடும் படிபொழிந்தான்
மிக்கோடி வீரன் வெகுண்டு. (௭)

அன்றியும்,

636. தெய்வப் படையாலுஞ் செஞ்சரங்க டம்மாலுங்
கவ்வைக் கலிவிசும்பு காட்டினான்—பவ்வ

(பா—ம்.) 1 எம்மால். 2 சரத்துக்குழுனி; சரத்துத்தழுனி.

முனையா வெதிரெழுந்த மூரித்தேர் மன்ன
ரெனையா,பிரவரையு மின்று. (அ)

இவ்வகை ஸ்ரீ வீஷ்மனால் விடப்பட்ட சரவருஷங்களையுந் திவ்வியாஸ்திரங்களையுந் தன் னயில்வா யம்புகொண்டு [அவையிற்றை] ஆகாசத்தே யறுத்து மாற்றிப் பின்னும் யாதுசெய்தா னருச்சுனன்:—

637. சிலையுங் கொடியுஞ் சினமாவுந் தேரு
மலையுங் கணைமாரி பெய்தான்—கொலைவிற்
கடுஞ்சின மால்யானைக் காவலர்கோன் மேலு
நெடுஞ்சிலைநாண் 1காலலைப்ப நின்று. (கூ)

**எ-து.**—ஸ்ரீ வீஷ்மன் மேலும் வெஞ்சிலையின் மேலும் பனைக்கொடி மேலும் புனைமணிநெடுந்தேர் மேலுஞ் சரபடலம் பொழிந் தென்டிசையுந் தலைபனிப்ப மகாயுத்தம் விளைத்திட்டா னருச்சுனனைக் கருதுவது. ஒருபால்,—

638. வாங்கு திரைப்பரவை வாள்வேந்தர் தாமெண்மர்
வீங்கு புயல்போல வில்வளையா—வோங்கு
பலவேந்தர் தம்மோடு பாஞ்சாலர் வெள்ளங்
குலவேந்தைச் சூழ்ந்தார் கொதித்து. (க0)

**எ-து.**—குந்திபோசனும் பாஞ்சால ராசனுங் கைகய ராசனுங் கடோற்கசனும் அஞ்சனவர்மாவுஞ் சத்திய சாத்தகியும் பஞ்சத்துரோபதியருஞ் சோமகருஞ் சிஞ்சையருந் திட்டத்துய்மனுந் துஷ்டகேதுவும் அபிமன்னுவும் பாண்டியராசனு முள்ளிட்ட வநேக ராஷ்டிரத்து க்ஷத்திரியரோடும் விசிஷ்டமான சேனையோடுஞ் சென்று நெருக்கி யழித்து மண்டிடத்துரப்பி யிருவிசும்புந் திசையு மறைப்பச் சரவருஷஞ் சொரிந்து மூடித் திளைத்துக் கொண்டார். அப்பொழுது,—

639. கடகிடந்து மீன்விழுந்து கண்சுழன்று மின்னிச்
சுடரு மொளிமழுங்கித் தோன்றிக்—கொடுநிமித்தம் [யுங்
விண்ணகத்துத் தோன்றினவே வேல்வேந்தர்க் 2கெத்தனை
கண்ணகத்த வாகக் கலந்து. (கக)

இவ்வகை ஸ்ரீ வீஷ்மனுக் குற்பாதம் பல தோன்றின. ஒண்சுடரை யூர்வளைந்தது. உருமுக்குரல் பல வதிர்ந்தது. சரவருஷம் பொழிந்திட்

(பா—ம்.) 1 காதலைப்ப. 2 எத்திசையுங்.

டது. குறைமாருதஞ் சுழித்தெழுந்தது. பருதிமண்டல மிருளாய்த்தோன் றிற்று. மத்தமாவும் பரிமாவுந் தேர்மாவுங் குருதி சோருங் கண்ணின வாயின. காகபந்தங் கவிழ்ந்தார்த்தன. கல்லுருத் தொத்த முடிந்தழிந்தன. கூகைக் குரல் குழறிவிட்டது. நரிக்குரல் பெருகிவிட்டது. விற்றுங் கணை யும் விழுந்துகாட்டின. செம்முக மெய்யாகு கவிழ்ப்பாய் மண்ணகத்தும் விண்ணகத்துந் தன்னிமித்தம் பல தோன்றின வென்றவாறு. இவ்வகை தோன்றின வுற்பாதங்கள் பலவுங்கண் டிளிப்பரிசை ரிச்சயமாமென்று கரு திச் சூழ்ந்துகொண்ட மகாசேனையைப் பிரத்தியக்ஷமாகவே நின் றுயிர் பருகுங் கூற்றேபோலவும், லோகாலோகங்களைத் தகிக்கவந்த ஊழித்தீப்போ லவுந் தகித்தான். அன்றி, மத்தியானத்தி லாகாயத்திலிருக்குஞ் சூரியமண் டலங் காண்டற் கரிதாகியவாறே போல யாவர்க்குங் காண்டற் கரிதாகி நின்ற ஸ்ரீ வீஷ்மனுக்குத் துணையாக யாதுசெய்தான் துரியோதனன்:—

640. காங்கேயன் றன்றனிமை கண்டு படைத்தலைவிர்
பாங்கோடும் [1]போரேன்ற பார்வேந்திர்—நீங்களெலா
மாங்கவனைக் கால்காப்ப வாடமருட் செல்கென்றான்
வீங்கெழிற்றோள் வேந்தன் விரைந்து. (கஉ)

**எ-து.**—ஸ்ரீ வீஷ்மன் றனிமை கண்டு சத்தியவிரனையுஞ் சல்லியனை யுங் கிருபனையுங் கிருதவர்மாவையுஞ் சயத்திரதனையு முப்பத்தொன்பதின் மர் தம்பிமாரையு மெத்தனையோ ராயிரம் பதாதிகளையுந் துரியோதன னேவ மற்றவர்களும்வந்து ஸ்ரீ வீஷ்மன் முன் புகுந்து அருச்சனனுடனே தாக்கினர். அப்பொழுது யாது செய்தான் வீமசேனன்:—

641. மொய்தா ரொலிப்ப முரட்டண்டு கொண்டிழிந்து
செய்தார் கடாக்களிற்றுத் தேர்வேந்த—ரெய்தார்த்து
முன்பிலா ராறுரை மூதாதைக் கெத்தனையும்
பின்பிலா ராக்குவித்தான் பேர்ந்து. (கங)

**எ-து.**—அருச்சனனுக்குத் துணையாகத் தேர்முனை விரைந்தண்டு கைக் கொண்டு அதிர்குரலெழுப்பி மணித்தேரினின் றிழிப்பாய்ந்து [வீமசே னன்] சென்றெய்தி ஸ்ரீ வீஷ்மனைக் காத்தாரையெல்லாங் கலக்குறுத்தி மேகபடலங்களைக் கடுவளி துரத்தாற்போல மகாசேனையைத் துரத்த [கொல் லாநிற்ப] நிலையாற்றாது புறகிட்டுப் போயினர்; ஸ்ரீ வீஷ்மனைத் தனி யாக்கினன் வாயுபுத்திரன் வீமசேனனென்றவாறு. அதுகண்டு,—

(பா—ம்.) 1 போர்வென்ற.

